REG. NO. M. 940.

சிவமயம்.
வேலுமயிலுந்துணை.

"VYSIAMITRAN"
Karaikudi.

# வைசியமித்திரன்

பிரதிசோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

பு. 10. காரைக்குடி ரௌத்திரிஞு புரட்டாசிமீ 26உ திங்கட்கிழமை 1920ஞு அக்டோபர்மீ 11உ இ. 40.

சந்தா விபரம்:
வருடம் 1-க்கு ... ரூ. 5—0—0
மாதம் 6-க்கு ... ரூ. 2—12—0
சிலோன், சிங்கப்பூர், கோட்டால் வைகோல் வருடம் 1-க்கு ரூ. 6—0—0
முதலான வெளியூர்களுக்கு தபால்கூலியுடன்

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு மாதம் 1-க்கு ரூபாய் 25-0-0.
கண்டாலும் விளம்பரம் செய்வோர்கள் எழுதிக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். சில்லரை விளம்பரங்களுக்கு நடவைக்கு வரி 1-க்கு அணு 4.


## சந்தாநேயர்களுக்கு அறிவிப்பு.

நமது 'மித்திரன் சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுதும், கடிதங்கள் எழுதும்பொழுதும் பத்திரிகையின் ராப்பரில் (மேற்சுற்றுத்தாளில்) குறித்திருக்கும் சந்தா நெம்பரை குறிப்பிட்டு எழுதினால்தான் தாமதமின்றிகவனித்து பதிலெழுத சௌகரிய மாயிருக்குமென்பதை அன்போடு தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

மானேஜர்.













தூத்துக்குடி
5—10—20

இவ்வூர் சத்ஜன சபையின் ... வது ஆண்டு நிறைவு விழா ... ண்டாட்டம், கொட்டாரக்கரை பிரமநிஷ்டாமடம் சித்சபா ஸ்தாபகர்களாகிய பிரம ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகளவர்கள் அக்கிராசனத்தில் வெகு மங்களகரமாய் 4-10-20 ல் நிறைவேறியது. அவ்வமயம் மதுரை தமிழ் சமய சங்கத்தினரால் தமிழ்மொழியைப் பற்றிய பின் வரும் நான்கு தீர்மானங்கள் கொண்டு வரப்பெற்று சர்வ ஜன சம்மதமாய் நிறைவேற்றப் பெற்றன.
(1) தமிழ் மொழியை சென்னைக் கல்வி கழகத்தால் பள்ளிக்கூடங்களில் முன் போலவே கட்டாயப் பாடமாக்க வேண்டும்,
(2) உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ் மொழியையும் ஏனைய உயர்தனிச் செம்மொழிகளோடு சேர்த்துக் கொள்ள வேண்டும்.
3. ஐஸ்கூல் வகுப்புகளில் ஆங்கிலப் பாடம் தவிர மற்றப் பாடங்களை எல்லாம் சுய பாஷை மூலமாக கற்பிக்க வேண்டும்.
(4) தமிழ் பண்டிதர்களின் நிலமையை உயர்த்த வேணடும்" என ஒருநிருபர் அறிவிக்கிறார்.

## பொதுக்குறிப்புகள்.

இந்தியாவுக்கு ஓர் இனிய சமாசாரம்.

மிஸ்டர் சையத் ஹாஸன் இமாமும் மற்றுஞ் சில கனவான்களும் சேர்ந்து பீஹார் ஒரிஸா மாகாணத்தில் ஒரு பெரிய சர்க்கரைத் தொழிற்சாலை ஸ்தாபிக்கப்போகின்றனரென ஓர் ஆங்கிலப் பத்திரிகை கூறுகின்றது.

வேலூர் கரும்புத்தோட்டம்.

சாவிரியணைத் தேக்கம் என்று கூறப்படுகின்ற கண்ணம்பாடித் தேக்கத்தில் தற்போது 11364 ஏக்கர் நிலங்கள் சாகுபடி செய்யப்படுகின்றன வென்றும், கவர்ன்மெண்டு தரிசு நிலங்களாக சுமார் 2000 ஏக்கர்கள் இருக்கின்றன வென்றும், சுமார் 20000 ஏக்கர்கள் நஞ்சை சாகுபடிக்குத் தற்போது மாற்றப்படலாமென்றும், அடுத்த 5 வருடங்களுக்குள் சுமார் 12000 ஏகர் நிலங்களை நஞ்சை சாகுபடிக்குக் கொண்டு வரலாமென்றும் தெரிகின்றது. இங்கு கரும்பு சாகுபடி செய்ய 'பம்பாய் டாடா கம்பெனியார்' முற்பட்டுப் பெரிய முதல் போட்டு வேலை செய்யத் தீர்மானித்து விட்டனர். அவர்கள் இக்கண்ணம்பாடி தேக்கத்தின் பக்கமாய் ஒரே ஜாகாவாய் இருக்கக்கூடிய அதிக நிலங்களைத் தங்கள் வசப்படுத்திக்கொண்டிருக்கும்புப் பயிர் செய்யத் தீர்மானித் திருக்கிறார்கள். இதற்காக மேற்படி டாடா கம்பெனியார், முன்னர் மைசூர் சமஸ்தானத்து விவசாய டைரெக்டராயிருந்த டாக்டர் லெஸ்லிகோல்மன் என்ற அவர்களையும் மாதம் 1க்கு 3000 சம்பளத்தில் சர்க்கரை ஆராய்ச்சி நிபுணராக நியமித்திருக்கின்றனர்.

இந்தியக்கூலிகளே! ஜாக்கிரதை.

இந்தியக்கூலிகள் வருஷந்தோறும் லக்ஷக்கணக்காக வெளிநாடுகளுக்குச் செல்வதனுலேயே இந்தியாவில் பஞ்சம் இடைவிடாது நிலைத்துவருகின்றது என்ற பத்திரிகைகளின் கூக்குரல் ஓர்புறமிருக்க, இப்பொழுது இலங்கை டைம்ஸ் பத்திரிகையில் "தமிழ்க்கூலிகள் தேவை" மலாய் நாடுகளில் 250,000 டன் ரப்பர்களை விளைவிக்க 380,000 கூலிகள் வேண்டும்" என ஓர் விஞேத விஷயங் காணப்படுகின்றது. இந்தியத் தலைவர்கள், முக்கியமாகக் கவனிக்கவேண்டிய தேசியவிஷயங்கள் இன்னும் பல இருப்பினும், அதிமுக்கியமாகக் கவனிக்கவேண்டியது, இந்தியக்கூலிகளின் விஷயமாமென்பதை ஜாக்ரதைப் படுத்துவோம்.

காரியத்தில் முடிவுபெற்ற கல்கத்தா டிராம்வே.

கடைசியாக நாளிது அக்டோபர்மாதம் 4ந் தேதி யன்று மாலையில் இதுகாறும் வேலை நிறுத்தஞ் செய்திருந்த டிராம்வேத் தொழிலாளர் சமாதானத்துடன் ஒருவித முடிவடைந்து விட்டனர். வண்டிகள் புஷ்பங்களால் அலங்கரிக்கப் பெற்று ஒவ்வொரு டிபார்ட்மெண்டுகளுக்கும் வகுப்புகளுக்கும் ஓட்டிக்கொண்டு போகப்பட்டன,

ஒத்துழையாமையின் மவாம்

சட்ட சபை எலெக்ஷனுக்கு விரோதமாகத்தீவிரபிரசாரஞ் செய்ய வேண்டியிருப்பதை பம்பாய் சுயராஜ்ய சபையினர் மேற்கொண்டு விட்டனர்.

ஒத்துழையாமைப் பிரசாரம்

இதனைக்குறித்து அமிருதபஜார் பத்திரிகை பின் வருமாறு எழுதுகின்றது:- பாபு விபின் சந்திர பாலர் திறமையான பிரசார வேலை நடத்திக் கொண்டு வருகின்றார் ஆனல் மிஸ்டர் வி. ஆர் தாஸ்அவர்கள் ஒரு வியாஜ்ஜியத்தில் முனைந்து நிற்பது மிகவும் வருத்தமா யிருக்கின்றது. மிஸ்டர் பி சக்கிரவாத்தியோ, வேறெரு ... த்து நப் போயிருக்கிறார். மிஸ்டர் ... ஸ்ரீ சகராசட்டர்ஜியும் மற்றும் ... எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டிக்குச் சில யோசனைகள் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள். மிஸ்டர் படேலின் ஏற்பாட்டையே அவர்கள் பெரிதும் அங்கீகரிக்கிறார்கள். மிஸ்டர் காந்தியும் பண்டிதநேருவும் சொல்லுகிற யோசனை சாதாரண ஜனங்களால் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு லாயக்காயில்லை என்பதே நமது அபிப்பிராயமாகும். மிஸ்டர் காந்தியைப்போன்றவருக்கே அத்திட்டத்தை நிறைவேற்றிவைக்கமுடியும். எல்லோரும் சேர்ந்து ஒருமனதாய் அனுஷ்டிக்ககூடிய ஒரு திட்டத்தைத் தயாரிப்பதே புத்திசாலித்தனமாகும். பெரியதலைவர்கூட மிஸ்டர் காந்தியின் யோசனையின் படிநடப்பது கஷ்டம், எனக் கூறுகிருர்கள். ஆகையால் மிஸ்டர் பாலரின் யோசனை சட்டாயம் ஒப்புக்கொள்ளப்படுமென எதிர்பார்க்கிறோம்.

இந்திரப் பிரஸ்தத்தில் இந்திய மகம்மதியரால்
ஏற்படுத்தப் பெறும் மத்தியஸ்த கோர்ட்டுகள்

டில்லி என்று வழங்கிவருகின்ற இந்திரப் பிரஸ்தத்தில் மத்தியஸ்த கோர்ட்டுகள் ஏற்படுத்தத் திட்டம் தயாராகி வருகின்றது. கூடிய சீக்கிரம் அது கிலாபத் கமிட்டியின் ஆதரவில் அநுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்படுமாம். அவை:. (1) 5000 ரூபாய்க்கு மேற்பட்ட விவகாரங்களைத் தீர்ப்பதற்கான ஜில்லா மத்தியஸ்த கோர்ட்டுகளென்றும், (2) 5000 ரூபாய்க்குக் குறைந்துள்ள விவகாரங்களைத் தீர்க்கத் தக்க மத்தியஸ்த ஸப் கோர்ட் டென்றும், (3) 2000 ஆயிரம் ரூபாய்க்குக் குறைந்துள்ள விவகாரங்களைத் தீர்க்கும் மத்தியஸ்த ஸ்மால்காஸ் கோர்ட் டென்றும், (4) கிரிமினல் கேஸ்களை விசாரிக்கும் மத்தியஸ்த கிரிமினல் கோர்ட் டென்றும், (5) சில்லரை விஷயங்களை விசாரிக்கும் மத்தியஸ்த கோர்ட் டென்றும் ஐந்து வகைப்படுமெனவும் அறிகின்றோம்.

சென்னை மிதவாத சங்கம்

சென்னை மிதவாத சங்கத்தின் கூட்டமொன்று சென்ற செப்டம்பர் மாதம் 19ந் தேதி மிஸ்டர் ஜி ஏ நடேசனுடைய காரியஸ்தலத்தில் நடைபெற்றது. ஸர் பி எஸ் சிவஸ்வாமி அய்யரவர்கள் அக்கிராஸநம் வகித்து அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. மிதவாத சங்கத்தின் சார்பாக சாத்தூர் மிஸ்டர் கே ஜி சிவசுவாமி அய்யரைப் பிரசாரவேலை செய்யும்படி கேட்டுக்கொள்ளவேண்டும்.

2. இச்சங்கத்தின் பிரசாரவேலைக்காக 500 ரூபா உதவிசெய்த கனவான்களுக்கு வந்தனமளிக்குமாறு ஸர் சிவசுவாமி அய்யரைக் கேட்டுக்கொள்ளவேண்டும்.

3 சங்கத்தின் வெளியூர் மெம்பர்களுக்கு வருஷச் சந்தாவை ஒரு ரூபாயாக நிர்ணயிக்கவேண்டும்.

4. இராஜப்பிரதிநிதி கனம் சாஸ்திரியாரின்பஞ்சாப் சம்பந்தமான தீர்மானத்தை நிராகரித்துவிட்டதை இச்சங்கம் அங்கீகரிக்கவில்லை. ராஜப்பிரதிநிதி அவ்வாறு செய்ததனல் பிரிட்டிஷாரின் நீதியில் ஜனங்கள் கொண்டிருந்த நம்பிக்கை குறைவதற்கு இடமேற்படுகின்றதென இச்சங்கம் அபிப்பிராயப்படுகின்றது. ஒத்துழையாமை இயக்கத்திற்கு விரோதமாகப் பிரசாரஞ் செய்ய ஒரு கமிட்டி நியமிக்கப்படவேண்டும்.

ஒத்துழையாமையினல் விளையக் கூடிய கெடுதிகளைக் குறிக்கும் ஒரு துண்டு பிரசுரத்தைத் தயாரிக்க கனம் சாஸ்திரியாரைக் கேட்டுக் கொள்ளவேண்டும் அந்தபிரசுரத்தை சுதேச பாஷைகளில் மொழி பெயர்த்துக் கூடிய சீக்கிரம் எங்கும் பரவும் படி செய்ய வேண்டும்"

இவ்விதம் மிதவாதிகள் செய்து வருகின்ற வேலைகள் எவ்வளவு ஆபத்தானவை என்பதை நாம் கூற வேண்டாம். ஒத்துழையாமையைக் கண்டித்து எழுதுவதற்கும் மிஸ்டர் சாஸ்திரியார் சரியானவர்தான். ஆனல், மிதவாதிகள் காங்கிரஸ் தீர்மானத்திற்கு எதிரிடையாகி தேசிய மகாஜனங்களின் மனங்கோணும்படி தீர்மானஞ் செய்வதில். தைரியங் கொள்ளுகின்றமையை அவர்கள் தேசத்துரோகிகளல்லர் என்று கருதமுடியாமலிருப்பது கஷ்டம். பொதுவாக அத்தகைய ஜீவித்தத்தை நினைக்கும்பொழுதேதேசியவாதியின் மனத்தில் குரோதம் சாந்தமாகுமன்றோ.

திலகரின் உண்மை ஞாபகச்சின்னம்.

எல்லா இந்திய திலகர் ஞாபகச் சின்னமொன்று ஏற்படுத்தும் விஷயமாய்த் தாம் கொண்டுள்ள அபிப்பிராயத்தை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி யோசிக்குமாறு மிஸ்டர் படேல் பின்வருமாறு தெரிவிக்கின்றார்:—

1. திலகரின் ஞாபகச் சின்ன நிதியின் சம்பந்தமாக 3 மாதத்திற்குள் 20 லக்ஷம் ரூபாய் வசூலித்து அதற்குத் 'திலகர் சுயராஜ்ய விளம்பர நிதி' என்று பெயரிட வேண்டும். திலகரின் ஞாபகச்சின்ன நிதிக்காக இந்நாட்டில்வசூலிக்கப்பட்டஎல்லாப்பணத்தையும் இதில் சேர்த்துவிட முயற்சிக்க வேண்டும்.

2. லண்டனில் ஒரு விளம்பர சபை ஏற்படுத்த வேண்டும். அதற்குப்பாரீஸில் ஒரு கிளையும் நியூயார்க்கில் ஒரு விளம்பர சபையும் ஏற்படுத்த வேண்டும்.

3. இந்த சபைகளுக்கு 'திலகர் சுயராஜ்ய விளம்பர சபை' என்றுபெயரிட வேண்டும். 20 லக்ஷம் ரூபாயையும் விளம்பர மூலமாயும் பிரசார வேலைமூலமாயும் 5 வருடத்தில் கீழ்க்கண்டவாறு செலவழித்தல் வேண்டும்

லண்டனிலுள்ள சபையார் 15 லக்ஷம் ரூபாய் செலவழிக்கவேண்டும். அமெரிக்காவிலுள்ள நியூயார்க் சபையார் 5 லக்ஷம் ரூபாய் செலவழிக்கவேண்டும். பண்டிதமதிலால் நேரு தம்முடன் இன்னும் இரண்டு மூன்று பேர்களை அழைத்துக் கொண்டு இங்கிலாந்திற்கும் பிரான்சிற்கும் சென்று வேலையைத் தொடங்கவேண்டும்.

லாலா லஜபதிராய் தம்முடன் இரண்டொருவரை அழைத்துக்கொண்டு அமெரிக்காவுக்குச் சென்று பிரசாரவேலையைத் தொடங்கவேண்டும். வருஷத்தில் சில ஆயிரம் ரூபாய்கள் செலவழித்து வெளிநாட்டிற்குப் போய் வந்து விடுவதால் நம் காரியம் பலித்துவிடாது. பணச்செலவுதான், நமது கோரிக்கைகளைப் பூர்த்திசெய்வதற்கு அவ்விதப் பிரசாரம் போதாது. 18 மாதங்களில் எகிப்திய தேசிய வாதிகள் தங்களுடைய கோரிக்கைகளை மேநாட்டில் வெளியிடும் விஷயத்தில் பல ஆயிரக்கணக்காகச் செலவுசெய்தனர். அதனல் அவர்கள் அடையப்பெற்ற பயனை அவனி (உலகம்) முழுதும் அறியும்."

ஒரு மறுப்பு

இந்தியா மந்திரி சபையில் ஓர் மெம்பராக யிருக்குமாறு மிஸ்டர் சிந்தாமணிகேட்டு விடப் பட்டிருக்கின்றாரென்றவதந்தி உண்மையல்ல வென இப்பொழுது மிஸ்டர் சிந்தாமணி பத்திரிகைகளுக்கு அறிவிக்கின்றார்.

சுதந்திரநாட்டில் சுதந்திரம்பெறும் சிறையாளர்.

பிரான்ஸ் பார்லிமென்டில் சிறையாளர்களை விடுதலை செய்துவிடவேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதற்கிணங்க, புதுச்சேரியில் நியாய இலாகாத் தலைவர் குற்றவாளிகளைக் கைதுசெய்வதை நிறுத்திவிடும்படியும் விசாரணையிலிருப்பவர்களை முன்னமேயும் வென்டர் ஜெயிலில் வாசஞ்செய்து வருபவர்களையும் விடுதலை செய்துவிடும்படி உத்தரவிட்டிருக்கின்றார் என அஸோஸியேடெட் பிரஸ் செய்தியொன்று கூறுகின்றது.

சிலோனில் சுதேசபாங்கி

கொழும்பில் உள்நாட்டுக் கைத்தொழில்கள் மிகக்குன்றி வருவதால் அதனை நிவர்த்திக்கவேண்டி அங்கு ஒரு சுதேச பாங்கி ஏற்படுத்துதற்கு தீவிரமான வேலை நடக்கின்றதாம்.

## (பொதுக் குறிப்புகள்.)

### "ஒற்றுமையாமை"மணம். பஞ்சாயத் கோர்ட்டாரின் தீர்ப்பு.

பம்பாயில் ஒரு முகம்மதியரின் வியாபாரக் கம்பெனிக்கும் பதரி நாராயண் என்னும் ஒரு இந்துவுக்கும் இருந்துவந்தவழக்கொன்று பஞ்சாயத்கோர்ட்டில் தீர்ப்புச் சொல்லப்பட்டது. இரு கக்ஷியார்களும் ராஜியானவுடன் முகம்மதிய வியாபாரக் கம்பெனியார் (வாதிகள்,) பசுக்களைக் காப்பாற்றும் பொருட்டு சில நாட்களுக்கு முன் ஏற்பட்ட கமிட்டியாருக்கு ரூ. 2500 கொடுப்பதாய் சம்மதித்தார்கள்.

பத்திரிநாராயண் (பிரதிவாதி) கிலாபத்தை இன்னும் அபிவிருத்தி செய்யும் பொருட்டு மகாத்மா காந்தியிடம் ரூ 2500 தன் வக்கீல்கள் மூலம் செலுத்திவிட்டார்." என பம்பாய் நிருபரொருவர் ஹிந்துப்பத்திரிகையில் எழுதுகின்றார்.

---

### சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் பிரசாரம்

மெஸர்ஸ் சி ராஜகோபாலாச்சாரியார், டாக்டர் டி. எஸ். எஸ் ராஜன் டாக்டர் பி வரதராஜலு நாயுடு மௌல்வி மூர்த்துஸா சாயபு முதலியவர்கள் காங்கிரஸ் நிர்மானத்தைப் பிரசாரம் செய்யும்பொருட்டு வெளியூர்களில் உபந்நியாசம் செய்ய மதராஸ் காங்கிரஸ் கம்மிட்டியின் அநுமதிபெற்றிருக்கிறார்கள். பற்பல ஜில்லா காங்கிரஸ் கம்மிட்டியார்களும் அங்கங்கே அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்வார்கள்.

---

### சிறையாளருக்குச் சற்புத்தி புகட்டுதல்.

திருச்சி செண்டிரல்ஜெயிலுக்குச் சென்று அங்குள்ள கைதிகளுக்கு மதபோதமும் நற்புத்தியும் புகட்டும்படி திருச்சி வக்கீல் மிஸ்டர் டி. வி. சுவாமிநாதய்யருக்கு அநுமதி கிடைத்திருப்பதாக அறிகின்றோம். இவர்களுக்கு மத போதனை செய்வதற்கு முன்னர், இவர்களுக்குத் தப்போதுமான உணவும் வாசஸ்தலமும் அமைந்திருக்கின்றதா என்பது கவனிக்கப் பட்டால் தான் அவர்களின் மூளை இம்மத போதனையை யங்கீகரிக்கும்.

---

### சேலம் விஜயராகவாச்சாரியார்.

மத்தியமாகாண காங்கிரஸ் கம்மிட்டியார் சேலம் மிஸ்டர் ஸி விஜயராகவாச்சாரியரை நாகப்பூர் காங்கிரஸில் அக்கிராசனம் வகிக்கலாமெனச் சிபார்சு செய்திருக்கிறார்கள்.

---

### தடுக்கப்பட்ட மூன்று வெளிநாட்டுப் பத்திரிகைகள்.

நியூயார்க்கில் பிரசுரமாகின்ற "லிபரேட்டர்" "சோவியட் ருஷியா" என்ற இரண்டு பத்திரிகைகளும்லண்டனில்பிரசுரமாகும் "டெயிலி ஹெரால்டு" என்ற பத்திரிக்கையும், இந்தியக்கடல் சுங்கச்சட்டப்படி இந்தியாவுக்கு வராமல் தடுக்கப்பட்டிருக்கின்றன.

---

### மரணம் பெருக்கக் காரணம் யாது?

இந்தியாவின் மரண விகிதத்தையும் மற்றதேசங்களின் மரணவிகிதத்தையும் ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது இந்தியாவிலேயே மரண விகிதங்கள் அதிகமாயிருக்கின்றன வென்றுங் கூற வேண்டியதாகின்றது. அதற்குக் காரணம் பிறக்கும் பொழுதே இறக்கின்ற குழந்தைகள் இந்தியாவில்அதிகம். நோய்களோ கணக்கிலடங்கா. இந்தியாவின் நிலை இவ்விதமிருக்க, அமெரிக்காவிலோ 1000 த்திற்கு 14 பேர்தான் மாண்டுபோகின்றனர்.

சென்ற 6 வருடங்களில் இந்தியாவிலே மாண்டுபோனவர்களின் விபரம் வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| 1913ல் | ,, | ,, | $28\frac{3}{4}$ |
| 1914 | ,, | ,, | 30 |
| 1715 | ,, | ,, | 30 |
| 1916 | ,, | ,, | 29 |
| 1917 | ,, | ,, | $33\frac{3}{4}$ |
| 1918 | ,, | ,, | $64\frac{3}{4}$ |

இதிலிருந்து இந்தியாவில்மரண விகிதங்கள் சராசரி 3 மடங்கு அதிகமாய் உயர்ந்திருப்பது தெரியவரும்

என விவேகபோதினி கூறுகின்றது. இதன் காரணத்தை மிஸ்டர் ஜகந்நாதின் தற்கொலையே விளக்கும். அல்லது இந்தியாவிலே இன்ப்ளூயன்ஸா முதலிய நோய்களாலும பஞ்சத்தாலும் 60 லக்ஷம் ஜனங்கள் மாண்டுபோயினர் என்று கூறிய மிஸ்டர் மாண்டேகுவின் தெளிவுரையும் விளக்கும் எனக் கூறலாம்.

---

### வேலை யில்லாதவர்களுக்கு வேலை.

இந்தியாவிலே பிறந்து இந்தியாவிலே வளர்ந்து இந்தியாவையே உறைவிடமாகக் கொண்டுள்ள கோடிக்கணக்கான ஜனங்கள் ஜீவிதத்திற்கு வழியில்லாமலும், வேலையகப்படாமலும் எவ்வளவு கஷ்டங்களை யநுபவிக்கின்றனர்? அவர்களிற் பலர் பற்பல அந்நியதேசங்களுக்குப் போவதும், மீண்டும் அங்கு போதுமான ஆதரவின்றி இந்தியாவிற்குத் திரும்பியும் வருகின்றனரல்லவா? இது இந்தியாவில் மாமூலாக நடந்துவருகின்ற சங்கதி சுய ஆட்சிபெற்று சுகித்திருக்கும் ஜப்பானிலோ இந்த மனஸ்தாபத்திற்கு இடமிருப்பதாகக் காணவில்லை ஏனெனின் அங்கு வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுத்து ஆதரிப்பதற்குப் பொதுஜனங்கள் மாத்திரமல்ல. சர்க்காரும் விசேஷக் கவலை எடுத்துவருகிறார்களெனக் கூறி ஜப்பான் நிருபரொருவர் பம்பாய் கிரானிகள் பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகின்றார்:—

வியாபாரம் ஓரளவு படுத்துப் போய் விட்டதால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையற்றுக் கிடக்கின்றனர். போலீஸாரும் முனிசிபாலிடியாரும் கவர்ன்மெண்டாரும் முதலாளிகளும், தொழிலாளர்கூட்டுறவுச் சங்கத்தாரும் அவர்களுக்கு ஏதேனும் வேலை கொடுத்து ஆதரிக்கத்தக்க வாலானதை யெல்லாம் செய்துவருகின்றார்கள். பற்பல வழிகளிலும் வேலையில்லாதவர்களுக்கு கவர்ன்மெண்டார் வேலை சம்பாதித்துக்கொடுக்க மிகவும் பாடுபட்டுவருவதை நான் பிரத்தியக்ஷத்தில் பார்க்கின்றேன். ரஸ்தாக்கள் முதலிய பெரியபாட்டைகள் போடவும், பாதைகளைப் பழுதுபார்க்கவும், நிலங்களைச் சுத்தப்படுத்தவும், மராமத்து வேலைகளைக் கவனிக்கவும், வேலையில்லாததொழிலாளர்கள் அமர்த்திக்கொள்ளப் படுகின்றார்கள். ரயில்வேக்களிலும் அவர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டு வருகின்றனர். இங்கு இந்தியாவின் நிலைமை என்ன என்று ஒரு பலமான கேள்வி விடையை எதிர்பார்த்து நிற்கின்றது.

---

### டிஸ்டிரிக்டு போர்டு

கனம் இராமநாதபுரம் ராஜா அவர்கள் இராமநாதபுரம் டிஸ்டிரிக்டு போர்டுக்கு அக்கிராசனாதிபதியாக நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

---

### பிரிட்டனில் போல்ஷிவிஸம்.

போல்ஷிவிக்கர்கள் பிரிட்டனில்ஒரு பெரிய பிரசாரவேலையை நடத்திவருகின்றார்கள். டெய்லி ஹெரால்டு பத்திரிகையில் அவர்கள் பங்கெடுத்திருப்பதும் அத்தகைய பிரசாரவேலையில் ஒன்றாகும். ஜனவரி மாதம் 1ந் தேதிமுதல் நாளது தேதி வரையில் 100000 பவுன்கள் வரை போல்ஷிவிக்கர்கள் பிரிட்டனில் பிரசாரவேலைக்காகச் செலவிட்டிருக்கிறார்கள் என லண்டன் டைம்ஸ் பத்திரிகை தெரிவிக்கின்றது.

---

### கிலாபத் தூதர்களின் வரவேற்பு.

மிஸ்டர் முகம்மது அலியின் தலைமையில் இங்கிலாந்து சென்றிருந்த கிலாபத் தூதர்கள் நாளிது மாதம் 4ந் தேதி யன்று பம்பாய்வந்துசேர்ந்தனர். அவர்களுக்குக் குதூகலமானவரவேற்பு அளிக்கப்பட்டது.

---

### டாக்டர் வ்ரஜேந்திரலால் சீல்

இவர் அடுத்த ஜனவரி மாதத்தில், மைசூர் ஸர்வ கலாசாலைக்கு உப அத்தியக்ஷராக நியமனம் பெறுவருவாரென அறிகின்றோம்

## அன்னிய வர்த்தமானம்

### அடுத்த அமேரிக்கா எலெக்ஷன். டாக்டர் வில்ஸன் மீண்டும் அபேக்ஷகராக நிற்கின்றார்.

அடுத்த நவம்பர் மாதத்தில் நடக்கப்போகும், குடியரசுத் தலைமை எலெக்ஷனில் பழைய பிரசிடெண்ட் வில்சனும் ஓர் அபேக்ஷகராக முன் வருகின்றார்.

---

### அமெரிக்காவில் இந்தியாகவர்ன்மெண்டின்பிரசாரவேலை

அமெரிக்கப்பத்திரிகைகளில் இந்தியா கவர்ன்மெண்டின் நடவடிக்கைகளைக்கண்டித்து வாச்சமியத்தில் சில காலமாய் ஆரம்பிக்கப்பட்டிருப்பது பற்றி, அதற்கு எதிரிடையான பிரசார வேலையை அங்கு போய்ச்செய்வதற்காக பாட்னா காலேஜ் பிரின்ஸிபால் மிஸ்டர் ஹொரான் ரஜாவின்மீது கவர்ன்மெண்டால் அனுப்பப்படப்போவதாக, "பீஹார் ஹெரால்ட்" என்ற பத்திரிகை தெரிவிக்கின்றது

---

### அமெரிக்கா நாடும் கவிஞானருளிய அருள்வாக்கும்

நம் நாட்டு நூல்கள் வட அமெரிக்காவிலும், தென் அமெரிக்காவிலும் பலரால வாசிக்கப்படுமாறு செய்த மகான்கள் முறையே ஸ்வாமி அபேதானந்த, ஸ்வாமி விவேகாநந்தா, என்னும் பெரியோராவர். இப்பால் தென் னமெரிக்காவிலுள்ள சிலி என்னும் தேசத்தில் உண்மை லாகவி ரவீந்திர நாதடாகூரின் கீதாஞ்சலியை ஸ்பானிய பாஷையில் மொழி பெயர்த்துப் பலர் படித்து வருகின்றார்களாம். டாகூரி னுடையாற்றப் பெற்ற 'சித்ரா' என்னும் நாடகமும் அதே பாஷையில் மிஸ்டர் குப்தா என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றதாம்.

---

### பொது நியாயத்தை யுணர்ந்த நியாயாதிபதி.

மிஸ்டர் ஜகந்நாத் என்னும் ஒருவர் கல்கத்தாவைச் சேர்ந்த ஹூக்ளி நதியில், குதித்துத் தற்கொலை செய்துகொள்ள யத்தனித்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்டு கல்கத்தா நகரத்து 3வது மாஜிஸ்திரேட்டினிடம் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டார். குற்றவாளி தரித்திரக் கொடுமையினால் சென்ற சில நாட்களாகப் பசியால் வருந்தி கல்கத்தாவில் ஜீவனோபாயத்திற்கு யாதொரு வழியும் பிறக்காததால் தமது உயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்ததாக அவர் வாக்குமூலம் கொடுத்தார். அதன்மேல்மேற்படிநியாயாதிபதியின் வருமாறு ஒருஉத்திரவுபிறப்பித்தார்:-

இது ஒரு பரிதாபகரமான விஷயம். ஆறு நாட்களாகப் பசிப்பிணியால் வருந்தினதின் நிமித்தம் ஹூக்ளி நதியில் விழுந்து தன் உயிரை மாய்த்துக்கொள்ள யத்தனித்தவரை என் முன் இரண்டுபோலீஸ்காரர்கள் கொண்டு வந்து நிறுத்தி யிருக்கின்றனர். அவர் மேல் சட்டத்தின் அமுலைச் செலுத்த என் மனம் துணியவில்லை. கோர்ட்டுகலையும் வரையில் காவலும் வழைப்பெட்டி நிதியிலிருந்து ரூபாய் 20 அவருக்கு அளித்து அவருடைய வாசஸ்தலத்துக்குஅனுப்பும் வண்ணமும் உத்திரவுபிறப்பித்திருக்கிறேன்'

இந்த நியாயாதிபதியின், அரிய தர்மச் செயலையும், சட்டநுட்பத்தையும் மனச் சாக்ஷியையும் மதித்துநடந்துகொண்ட உத்தியோக தோரணையையும் நாம் பெரிதும் பாராட்டுகின்றோம். ஆனால் இது போன்று, நமது ஏகாதிபத்தியத்திற்குள்பட்ட எவ்வளவு ஜனங்கள் வயிற்றுப்பிழைப்புக்கு வழிதேடி யலைக்கும் நாதியின்றி தம் வாழ்நாளைத் தற்கொலை புரிந்துகொள்ளுகின்றன ரென்பதை உலகிலுள்ள ராஜதந்திரிகள் உணர்ந்து, அவர்களைச் சட்டங்களைக்கொண்டு தண்டிக்காமல் அவர்களின் பசிப்பிணியுற்று வயிற்றுக்கு உணவளித்து அவர்களின்வாழ்த்தலைப்பெறவிரும்பவேண்டும். இதுவே கடவுளால் எளியோர்களைக் குறித்து வலியோர்களுக்களிக்கப்பட்டிருக்கின்ற நியதிச்சட்டம். அவ்விதஞ்செய்யத் தவறியோர்தாம் தண்டனைக்குரியவர். இப்பொழுது அழகிய தோல் புயிண்டு செய்து விற்கப்படுகின்ற சட்ட புத்தகங்களில் வரி பிளந்து இக்குறிப் பொன்றை எழுதி ஒட்டிவிடவேண்டும.

### ஜெர்மனிக்கும், பிரான்ஸுக்கும், யுத்தத்திற்கு முன்இருந்த ராஜீய ஸம்பந்தம்

இன்று புனருத்தாரணமாகிவிட்டது. பிரான்ஸிலிருக்கவேண்டிய புதிய ஜெர்மன் தூதராகிய ஹெர்மேயர் என்பவர் இன்று பிரஞ்சுக்குடியரசுத்தலைவரிடம் தமது நியமன பத்திரத்தைத்தாக்கல் செய்தார். அப்பொழுது பிரஞ்சுப்பிரதம மந்திரியும் கூட இருந்தார். பிரஞ்சுக்குடியரசுத்தலைவரும்ஜெர்மன் தூதரும் சல்லாபமாகப்பேசிக்கொண்டிருந்தனர்.

---

### உயிர் பெற்றெழும் பகைவருலகம்.

ஜெர்மனி வியாபாரம் புனருத்தாரணமாகி விட்டது. சென்றவருடம் ஜெமனிக்குள் இறக்குமதியான சாமான்களின் மதிப்பு 33000 லக்ஷமாகும். ஏற்றுமதியின் மதிப்பு 10000 லக்ஷமாகும். இவ்வருடம் ஜனவரி 11உ யிலிருந்து மேமீ 1-உ வரை வரியிலிருந்துவரப்பட்ட ஏற்றுமதியும் இறக்குமதியும் சமமாகஇருக்கின்றது. மேமீ முதல் ஏற்றுமதி அதிகப்பட்டுகொண்டே வருகின்றதுஎன ராய்ட்டர்த் தந்தியால் அறியப்படுகின்றது.

---

### வாரம் ஒன்றுக்கு 10பவுன் சம்பளம்'

இங்கிலாந்தில் வாரம் ஒன்றுக்கு 6 பவுன் முதல் 10 பவுன் வரை சம்பளங்கொடுத்து போல்ஷிவிக்கர்களை ஜில்லா ஜில்லாவாகப் பற்பல பிரசாரகர்களை நியமித்திருக்கிறார்களாம்'

---

### அந்நியநாட்டு உதவிமந்திரி

அந்நிய நாட்டு உதவி மந்திரியாயிருந்த லார்டு ஹார்டிஞ்சின் ஸ்தானத்திற்கு சர் அயர் நியமிக்கப் பட்டிருக்கிறார்.

---

### மேல் நாட்டில் கீழ் நாட்டு சாஸ்திர ஆராய்ச்சிப் பள்ளிக்கூடம்.

இப்பெயர் பூண்டதோர் பள்ளிக்கூடம் லண்டனில் ஸ்தாபித்து நடைபெற்று வருகின்றது. அதனில் அரபிய பாஷை கற்றுக் கொடுப்பதற்காக டாக்டர் டி டபிள்யூ ஆர்னல்டு என்பார் நியமிக்கப்பட்டிருக்கின்றார். இவ்வாறு கீழ்நாட்டுப் பாஷைகளைக் கற்றுக்கொடுப்பதற்கு மேல் நாட்டு ஆசிரியர்களை நியமிப்பது யுக்திக்கும் சாஸ்திர நுட்பத்திற்கும் முற்றிலும் விரோதமாகயிருக்கின்றது எனச்சிலர் கருதலாம். ஆனால், சுயராஜ்யமின்றிய தேசத்தில் இது போன்ற விஷயங்கள் எத்தனை மிகுந்தாலும் அவை விநோதமானவையன்றல்லவா?

---

### ஸ்வீடன் தேசத்தில் நம் ஜகதீச சந்திரவஸு

ஸ்வீடன் தேசத்தின் தலைநகராகிய ஸ்டாக்ஹோமில், இந்திய நுண்ணியர்ப் புலவராகிய மஹான் ஸர்ஜகதீச சந்திரவஸு அவர்கள் அத்தேசத்திய மேதாவிகளின் முன்னிலையில் உபந்யாசஞ் செய்யப்போவதாக அறிகின்றோம். ஜகதீசன் ஜகதீசருக்கு நீண்ட வாழ்க்கையை யளித்து இந்தியப்புகழை இவ்வுலகெங்கும் நிலைநாட்டுவாராக!

---

### இந்தியக்காப்பியுடன் போட்டிக்கு வருகின்றபங்காளி.

அநேகமாக இந்தியக் குடும்பங்களால் ஏகோபித்து அநுஷ்டித்து வரப்படுகின்ற இந்தியக் காப்பிக்கு ஒரு பங்காளிஜப்பானில் முளைத்திருக்கின்றாராம். அவர் அநேகரசாயனப் பொருள்களால் சமைந்த செயற்கைக் காப்பி என்று பெயர் வகிக்கின்றார். முன்னரே ப்ரேஸில் தேசத்துக் காப்பிக்கொட்டைகளால் இந்தியக் காப்பிப்பயிர் பெரிதும் பாதிக்கப் பட்டிருக்க, இப்புதிய ரசாயனக் காப்பியும் பரவி விடுமாயின், அநேகமாக இந்தியக் காப்பிப் பயிர் அழிந்து விடக் கூடுமோ என் ஒரு சந்தேக முண்டாகின்றது. ஆனால், வெளி நாடுகளிலிருந்து அழகிய டப்பாக்களில் அடைத்து வரப்படுகின்ற பொருள்கள் எவையாயினும், அவைகளைப் பற்றிய குணதோஷ ஆராய்ச்சியை வேறோர் புறத்தில் தள்ளி விட்டு அவைகளை உடனே கல்வர வேற்பது என்பது இந்திய நாட்டில் சாதாரணமாக அநுஷடிக்கப் படுவது மாமூலாதலால், குறித்த விஷயத்தில் அவ்வாறு செய்யாமல் இந்தியக் காப்பிகளின் விஷயத்தில் எல்லோரும் அநுதாபமாக நடந்து கொள்ளும்படி நாம் வேண்டுகின்றோம்.

## விநோதக்குறிப்பு

### இடியும் காற்றும் உற்பத்தியாவது எங்ஙனம்? ஆகாயவிமானத்தில் தோன்றுங் காக்ஷி!

இடியும் மழையும் உண்டாகின்ற காலத்தில் பூமியிலுள்ளவன் பார்க்க நேரும் சில அதிசயங்களைக் காட்டிலும் ஆகாய விமானத்தில் சஞ்சரிப்பவன் பல விநோதங்களை கண்ணுறுகிறான். ஐஸ்தியான மழை பெய்யுங் காலத்தில் காற்று மிகுதியாய் உண்டாகின்றன. அக்காற்றானது ஆகாயத்தில் வெகு தூலக்கு மழைத்தூவானங்களைத் தூக்திச்செல்லுகின்றன, அதோடு மேகங்களொன்றோடொன்று மோதும்படியாகச் செய்கின்றது. அக்காலத்தில் மின்னலும்இடியும் கண்ணை மழுங்கச் செய்யவும், காதுகளைச் செவிடுபடவும் செய்கின்றன. இவைகளெல்லாம் சொற்பநேரத்திற்குள்ளேயே உற்பத்தியாகின்றன. முதன் முதல் ஆகாயத்தில் அங்குமிங்கும் சிறுசிறு துண்டுகளாக மேகங்கள் காணப்படும். அவை வெகு சீக்கிரத்தில் ஓர்ஆச்சரிக்கைபோல் காற்றினால்கூட்டப்பட்டுவிட்டதுபோலப் பார்க்கலாம்.

4000 அடிக்கு மேல் ஆகாயவிமானத்திலிருந்து பார்க்கும் ஒருவனுக்கு, கோடைகாலத்தில் மேகங்கள் ஒவ்வொரு இடத்திலும் சேரும் நிலைமை வியக்கத்தக்கதாயிருக்கும். அக்காலத்தில் பூமியில் உஷ்ணமானதுகிரந்தரமாயிருக்கும். அந்த உஷ்ணமானது பூமியிலுள்ள ஜலத்தை ஆவியாக பரிணமிக்கச் செய்து ஆகாயத்தில் ஏறுங்காலத்தில் ஆகாயம் சற்று ஈரமாகவிருக்கும். அப்பொழுதுதான் இடிச் சப்தம் உண்டாகின்றன இவ்விதம் ஒரு மணி நேரம் சென்றதும் மேகங்கள் ஒன்று சேரவாரம்பிப்பதை ஆகாயத்திலுள்ளவன் அறிகிறான். பூமியிலுள்ள மேகங்கள் கறுத்து பயங்கரமான மழை பொழியும் தருவாயை கவனிக்கிறான். மேகத்தின் மேல் ஆவியின் மிகுதியால் ஆகாயமானது மிகுதியும் பாதிக்கப்பட்டுவருவதை ஆகாயவிமானி அறிந்துகொள்ளுகிறான். இந்த சந்தர்ப்பத்தில் மேகங்களின் கூட்டமானது அதிகப்பட வாரம்பிக்கின்றன. கீழிலுள்ள சூடான ஆகாயம் மேகங்களை மேல் நோக்கிச் செல்லும்படி தூக்குகின்றது. மேலே செல்லச் செல்ல ஆகாயம் ஈரமாய் விடுகின்றன.

இவ்விதம் மூன்று, நான்கு மைல்கள் உயரச் செல்லுமானால் அக்காலத்தில் இடியும் காற்றுமுண்டாகின்றன. அவற்றின்மருங்களிலிருந்தும் மின்னல்கள் உண்டாகின்றன. கோடைகாலத்தில் அப்பொழுது தான் கனத்த மழையும ஆலங்கட்டியும் ஏராளமாக பொழிவதற்கு ஆரம்பமாகின்றது. ஒரு துண்டு மேகத்தில் அநேக லட்சக்கோடிக்கணக்கான நிறையுள்ளநீராவிபொருந்தியிருக்கிறதாம். அவைகள் நிமிஷ நேரத்திற்குள் திரள்வதன் பெருமை சொல்லத்தரமன்று. ஒரு மேகத்திலிருந்து மறு மேகத்துக்கு வீசும் மின்னலின் தூரம் 20 மைல்களிருக்குமாம். ஒரு மின்னலிருந்துண்டாகும் ஒருஇஞ்சுதீப்பொறியின் காந்த சக்தியளவை கவனிக்கும்போது 15000 போல்டு நெருக்கமுள்ளதாகவிருக்குமாம். இவ்வளவு பெரிய இடிமுழக்கத்தை யுண்டாக்கும் மேகங்களிடையில் சூரைக்காற்று உண்டாவது சகஜம். அவ்வ ஆகாயத்தினின்றும் பூமியில் வெகுவேகமாய் பிரவேசித்து பூமியிலுள்ள மரங்களையும், வீடுகளையும்சுழற்றிப் பிடுங்கி எறிந்து விடும். மேகங்களிலிருந்து உண்டாகும் சூரைக் காற்றே அபாயகரமானது. இடி மழை யேற்படுவதற்கான காற்று ஈரம் பொருந்தி யனவாய் பூமியினின்று ஆகாயத்தில் கிளம்பி வெண்ணிறமான சிறு துண்டுகளான மேகங்களாக நிரம்பிநிற்கும். இவ் விதம் ஆகாயம் நிறைந்த வுடன் காற்றடிக்க வாரம்பிக்கும். காற்றானது இந்த மேகங்களை ஒன்று சேர்த்து ஆகாயத்தினுயரத்தள்ளும். அப்பொழுதுதான் இடியும் காற்றும், மழையும் உண்டாகின்றன.

### ஏக காலத்தில் ஏழு குழந்தைகள்

கீழ் ஆப்பிரிக்காவிலுள்ள தங்கநீகாப் பிரதேசத்தில் சென்ற ஜூலை

இதன் தொடர்ச்சி 7ம் பக்கம் பார்க்க.



## தொழில் குறிப்பு.

பர்மாவில் காகிதக்கூழ் கைத்தொழில் ஏற்பட்டிருக்கின்றதாம் வியாவில் அது முன்னேற்றமடைவதுமெனவும் கேள்விப்படுகின்றோம். வருடம் 1க்கு ஒரு கோடியே 40 லக்ஷம் டன் காகிதக்கூழ் செய்வதற்குப் போதிய மூங்கிலும் சவுக்குப்புல்லும் இந்தியாவிலிருக்கிறதென்று உத்தியோக முறையில் வெளியிடப் பட்டிருக்கின்றது.

இத்தொழிலில் பிரவேசித்து இதன் அபிவிருத்திக்காக உழைக்க முன் வருவோர்க்கு இந்தியா கவர்ன்மெண்டார் உதவி செய்யத் தயாராயிருக்கிறார்களாம். இப்பொழுதோ எல்லாவிதமான காகிதங்களும் அபாரமானவிலைகூறப்படுகின்றன. இதனைத் தொழில் திறனுடைய கல்விச் செல்வவான்கள் கவனிக்குமாறு வேண்டுகிறோம். இதனை ஐரோப்பியர் கைப்பற்றுமுன் இந்தியவியாபாரிகள்முன் வருதல் நலம். பின் வருந்துதலால் பயன் யாது?

---

### மைசூர் சந்தனத் தைலம்.

சந்தனக் கட்டையிலிருந்து தைலமிறக்குந் தொழில் மைசூரில் வளர்ந்து வருகின்றது. அதனால் பெருத்த லாபமுண்டென்பது வெளிப்படை. மைசூரில் இறக்கப்படுகின்ற சந்தனத் தைலத்திற்கு உலகத்தின் எல்லா பாகத்திலும் நல்ல மதிப்பும் விலையுமுண்டு. ஆனால் மேலாஸ்திரியாவில் இந்தக் கைத்தொழில் இன்னும் சிறிது சீர்திருத்த முறையிற் செய்வதற்கான ஏற்பாடுகள் யாவுஞ் செய்து முடிக்கப் பட்டுள்ளன வென்றும் கவர்ன்மெண்டு விவசாய பரிசோதனைச் சங்கத்தாரின் அநுமதி பொன்றுதான் எதிர் பார்க்கப் படுகின்றதென்றும் அறிகின்றோம். இங்ஙனம் மைசூர் கவர்ன்மெண்டார் செய்வது உண்மையாயின், அதனால் இந்தியாவுக்குப் பெரிதும் செல்வப் புகழ் நஷ்டமெனக் கூறுவோம். தொழில் முறையில் ஆஸ்திரேலியாவில் நிபுணர்களிருப்பின், அவர்களிடத்திற் சென்று கற்று வருமாறு மைசூர் கவர்ன்மெண்டார் தமது அரசாங்க வாலிபர்களைப் பொறுக்கியெடுத்து அனுப்புதலே நலமாம். இந்தியாவிலிருக்கின்ற யாதொரு பொருளையும் பிறதேசத்திற்கு அனுப்புவது என்ற முறையே தேவை யற்றதும் தவறானது மாகும். இதனை மைசூர் கவர்ன்மெண்டாரும் உணர்ந்துதான் இங்ஙனஞ் செய்கின்றனரோ!

கமூலிகையை வெளியிடாமல் மனத்தில் மறைத்து வைத்துக் கொள்வரோ சில காலத்திற்குள் இப்பிரகிருதி மண்டலத்தினின்று மறைந்து விட்டு வேண்டியவர்களாகின்றனர். விவேகிகளா யுள்ளோர் இவ்வுண்மைகளை யாராய்ந்து அறியின், "கடவுளால் படைக்கப்பட்டு, சகலப் பொருள்களும் நிறைந்து விளங்கும் இப் பூமி மண்டலத்தில் தாம் மாத்திரம் அறிந்து மகிழ வேண்டும், பிற ரொருவருக்கும் வெளியிடக் கூடாது" என்ற பலமான ரகசிய உண்மை ஒன்றிருப்பதாகவே காணப்படமாட்டாது. அத்தகைய உண்மையுணர்ந்தோர் 'உண்மையைவெளியேகூறினால்தமது தலை வெடித்துப்போகும்' எனப்பிறர் பூச்சாண்டி சாபமிடினும், சிறிதும் அஞ்சார். ஆறு நூறுயினும், நூறு ஆறுயினும் உண்மை யநுபவத்தை உலகிலுக்கு வெளியிட்டேதீருவார். அவர்களைச் சாபம் என்னும் பேய் பிடிப்பதேயில்லை. அவர்களின் பெயரைக் கூறினாலும் பிறரைப் பிடித்த பேய் நீங்கும். ஆகவே, அத்தகைய பெரியார் மூலமாய் நான் அறிந்துள்ள சில மூலிகைகளை நம் மித்திரனில் முறையே வரைவேன். நேயர்கள் அவற்றின் நன்மையை அநுபோகத்தில் கண்டு விடைகூறுமாறு வேண்டுகின்றேன்.

### 1

### துளசி.

"துளசி" என்னும் மூலிகையானது தெய்விகத்தன்மை பொருந்தியதென்றும், அது சத்துவ குணவடிவினனாகிய திருப்பாற்கடலுளுக்குப் பிரியமான தென்றும் புராண-புராதன-நூல்வயவக்கூறும். அஃது ஓர் புறமிருக்க சரீர ஆரோக்கியத்தைக் குறித்து பேசுமிடத்து துளசியின்குணங்களைப்பற்றிக் கூறுவதென்றால் அது கணக்கிலடங்காது விரியும். வைசூரி நோய்க்குத் துளசியைப்போலும் உபகாரஞ் செய்யத்தக்க சிறந்த மூலிகை வேறொன்றுமின்று வைசூரி பரவுமிடங்களில் வசிப்போர் தினந்தோறும் 10 இலை துளசியைத்தின்று வந்தால் இவர்களுக்கு வைசூரி போட்டுவதேயில்லை. வைசூரி ஜுரம் அடிக்கும் பொழுதும் துளசிச் சாற்றை இரண்டு வேளைகளிலும் உட்கொண்டு வந்தால் வைசூரி போட்டாமலே நின்றுவிடுகின்றது. அநுபவத்திற் கண்ட விஷயம். வைசூரி போட்டியவர்களோடுநெருங்கிப்பழக வேண்டியவர்கள் தினந்தோறும் துளசியை உட்கொண்டும், வைசூரி நோய் போட்டியவர்களிடஞ் செல்லும்பொழுது துளசியைக் கசக்கி முகர்ந்தும் வந்தால், வைசூரி உபாதியே பாதிப்பதில்லை. மூலரோகம், பலகாய்ச்சல் முதலிய கஷ்டவியாதிகள் தொடரதொழிபவேண்டுமாயின், துளசி இலையை உலர்த்திப் பொடித்து, காப்பிக்குப் பிரதிநிதியாக உபயோகித்து வரவேண்டும். அரோகத்தையும் இந்த முறை கண்டிப்பதாகும். காக்கைவலி நோயாளருக்கு இதனை நசியஞ் செய்யின், அந்நோய் அறவேநீங்கிவிடுகின்றது. (நசியம் என்றால், மூக்கில் சாறு பிழிதல்)

---

### பூகர்ப்ப சாஸ்திர போதகசாலை.

இந்தியர்களின் நற்காலத்திற்கு அறிகுறியாக கல்கத்தா சர்வகலாசாலைக் கமிட்டியார், இந்தியர்களுக்குப் பூகர்ப்ப சாஸ்திரத்தைப் போதிக்க வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தி கவர்ன்மெண்டாருக்குச் சிபார்சு செய்தனர். அந்த சிபார்சை இந்தியா கவர்ன்மெண்டாரும் அங்கீகரித்து பீஹார் அண்டு ஒரிஸா மாகாணத்தைச் சார்ந்ததார்பாத்தில் மேற்படி பூகர்ப்ப சாஸ்திர போதகசாலையை ஸ்தாபிப்பதாக நிச்சயித்திருக்கிருக்கின்றனர். முக்கியமாக பூகர்ப்ப பரிசோதனை இலாகாவிலுள்ள உத்தியோகஸ்தர்களை இப்பாடசாலையில் தயாரித்துவிடலாமென்பது கவர்ன்மெண்டு அபிப்பிராயமாகு மாயினும், எவவாறேனும் இத்தகைய கலாசாலை யொன்று இந்தியாவில் ஏற்பட்டமைபற்றி நாம் பெரிதும் மகிழ்ச்சியுறுகின்றோம். இதனைக்குறித்து வேறோர் அங்கத்தில் சிறிது பிரஸ்தாபிக்க விருப்பம்,

## வைத்தியக் குறிப்பு.

### ஏக மூலிகை ரகசியம்.

உலகத்தில் பிரசித்த பெற்ற பல டாக்டர்களாலும் மருந்துகளாலும் கூடப்பார்த்துக் கைவிடப்பட்ட அநேகம் நோய்களைச் சில நாட்டுமூலிகைகள் சொஸ்தப்படுத்தி விடுகின்றன. ஆனால், அத்தகைய மூலிகைளைச் சில நாட்டுமூலிகைகளை யறிந்தோர், பற்பல காரணங்கூறி அவற்றை வெளியிட மனமில்லாது வருந்துகின்றனர். அவற்றைக்கொண்டு உலகத்திற்குப் புரிய வேண்டிய உத்தம உபகார உரிமைகளையு மிழக்கின்றனர். அவ்வித உரிமைகளை இந்தியப் பெரியோர் இழக்கும் படியாக இருப்பின் இக்காலத்திற்குள் இந்திய ஆயுர்வேதம் இவ்வுலகமுழுவதும் பரவியிருக்கும். போனதுபோக, இனியேனும், நமது நாட்டு மருந்துகளுடைய அநுபவ குணங்களை யறிந்தோர் முறையே தேசாபிமானத்தையும், பரோபகாரத்தையும் கருதி உண்மையை வெளியிட்டு வருவார்களாயின் அவர்கள் உலகத்திற்குப் பெரிதும் நன்மைபுரிந்தவர்களாகக் கருதப்படுவர். ஏனெனில் 227 திரவியங்களால் சமைக்கப்பெற்ற இப்பூமியில் சகலவிதமான மூலிகைகளும் தாராளமாக அமைந்துள்ளன. அவை இப்பூமியுள்ள காலம் வரை இதனை விட்டுப்போய்விடுவன வல்ல. ஆனால் அவற்றின் உபயோ

## விவசாயக்குறிப்பு.

### இந்திய நாட்டின் முற்கால தற்கால விளைவு.

இந்தியாவில்உணவுப்பொருள்கள் போதுமானபடி அகப்படாது இந்தியர்களும், இந்திய நாட்டுக்கு வருகின்ற விருந்தினருமாகிய பிறநாட்டினரும் வருந்துகின்றனரென்பது எல்லோரும் அறிந்த விஷயம். இதற்குப் பலர் பலகாரணங்களைக் கூறுகின்றனர். சிலர் ஜனங்கள் வரவர விருத்தியாகி விட்டனரென்றும், வேறு சிலர் ஜனங்கள் முற்காலத்திய விவசாயத் தொழிலைச் சிரத்தையோடு நடத்தவில்லை யென்றும், மற்றுஞ்சிலர் "எல்லோரும் ஒரு சிலர் உழைத்து உற்பத்தி செய்கின்ற பொருள்களை ஒன்பது விலைகொடுத்து வாங்கி ஐம்பது விலையாகப் போட்டி போட்டுக் கைம்மாற்றஞ் செய்ப வியாபாரிகளாக அமர விரும்புகின்றனரேயன்றி வெயர்வைசிந்த ஒருவரும் விரும்பாமையே பஞ்சத்திற்குக் காரணமென்றும் கூறுகின்றனர். படித்த ஜனங்களோ, பிற நாடுகளுக்கு ஏற்றுமதி அதிகமாகிக்கொண்டே வருவதால் இந்தியா இந்த நிலைபடைந்தது என வாதாடுகின்றனர். சிலமேதாவிகளோ, பூதத்துவ சாஸ்திரப்படி பூமியினுள் பாகத்திலே இருக்க வேண்டியனவாகிய சில உலோகப்பொருள்கள் பூதேவியின் ஹிருதயம் குடலைப் போன்ற மர்மஸ்தானத்திலிருந்தும் வெட்டியெடுக்கப் படுகின்றன வென்றும், அக்காரணத்தினால் பூதேவிக்கே ஜீரணக் கருவிகள் தாறுமாறாகி அஜீரண நோய் ஏற்பட்டு விளைவு பொருள்களுக்குப் போதுமான புஷ்டியில்லை யென்றும் கூறுகின்றனர். சிறந்த விவசாய நிபுணர்களோ, மனிதர்கள் வரவர சுயநலப் புலிகளாகி, தாம் பூமாதாவினிடத்தினின்றும் இடைவிடாது பெற்றுவருகின்ற உணவுகளுக்குக் கைம்மாறாகச் சில செடி தழை குழைகளைக் கூட நன்றாக அளிப்பதில்லை யென்றும். அதனால் பூமாதாவாகிய பசு நன்றாகப் பயனைக் கறப்பதில்லையென்றும் கூறுகின்றனர். மற்றும் சாமான்ய ஜனங்களோ, "மேற்கூறிய காரண காரியங்களின்நிகழ்ச்சியைபற்றிமுன்னோர் கூறியதாகிய ஒரு கற்பனையைவேறு வகையாகப் பொருள் கொண்டு' இது கலியுகமாதலால், வரவர விளைவு குறைகின்றதென்றும், இனி அவ்விதமே இருக்குமென்றும் கூறுகின்றனர். லக்ஷக்கணக்கான விவசாயக்கூலி ஜனங்கள் தம் நாட்டுப் பூமியில்சேவைசெய்ய வகையின்றிப் பிறநாடு சென்று விட்டனரென்பதையாவது, அல்லது விவசாயத்தின் பயனுக்கேற்ப பூமிக்கு மீண்டும் நாம் உணவளிக்க வேண்டிய சில முக்கியக் கடமைகளைப்பற்றியாவது இந்தக்கடைசிக்கக்ஷியினர் அநேகமாகப் பொருட்படுத்துவதில்லை. அவை எங்ஙனமேனுஞ் செல்லட்டும். நாம் இந்திய விவசாயத்தை நோக்குவோம்.

1891-ம் வருடம் முதல் 1901ம் வருடம் வரை நமது தேசத்தின்மொத்தஜனத்தொகைசுமார்69லக்ஷம் அதிகரித்திருக்கின்றது. ஆனால் இந்தப் பத்து வருடங்களுக்குள் விவசாயஞ் செய்பவர்களின் தொகை 2 கோடியே 3 லட்சம் அதிகரித்திருக்கின்றது. இந்த 2 கோடியே 3லக்ஷம் ஜனமானது இங்கிலாந்து ஸ்காட்லாந்து ஆகியஇவ்விரண்டு தேசங்களின் மொத்த ஜனத்தொகையில் பாதியாகும். 1901௵ முதல் 1911ம் ௵ வரை ஜனத்தொகை மொத்தம் 1 கோடியே 88லக்ஷம் அதிகரித்திருக்க. இப்பத்து வருடங்களுக்குள் விவசாயிகளின் தொகை 2கோடியே 85 லக்ஷம் அதிகரித்திருக்கின்றது. குடியேற்ற நாடுகளாகிய ஆஸ்திரேலியா, கானடா தேசங்களின் ஜனத்தொகையையும், கடந்த அகோர யுத்தத்தில் ஜெர்மானியரால் நாசமாக்கப்பட்ட பெல்ஜியத்தின் ஜனத்தொகையையும் கூட்டினால் இந்த 2 கோடியே 85 லக்ஷம் ஜனத்தொகைக்குச் சமமாகும். இந்தக் குறிப்புகளை ஆராயுங்கால், மொத்த ஜனத்தொகையின் அபிவிருத்தி யைப்பார்க்கினும்விவசாயிகளின்தொகையே அதிகரித்து வருகின்றது என்பது விளங்கும். இதற்குக் காரணம் மிஸ்டர் பிழனி வேல் நாடார் அவர்கள் சொல்வது போல, யந்திர சாதனங்கள் மலிந்த காரணத்தால், பற்பல கைத் தொழிலாளரும் தமது தொழில்களைக்கொண்டு, ஜீவிக்க இயலாதவர்களாகி விவசாயத்திற்குத் திரும்பி விட்டார்களென்றே வைத்துக் கொள்வோம். அவ்விதமாயினும், தற்காலம் நமது தேசத்தின் நிலவளமும் சம்பத்தும் நாளுக்குநாள் குன்றி வருகின்றதென்று கூறவேண்டியிருக்கின்றதேயன்றி, விவசாயஞ் செய்வோர் பெருகிவிட்டனர் என்ற கணக்குக்காக இதர தேசங்களோடு ஒப்பிட்டுக் கூறும்படியான சந்தோஷ நிலை நம் தேசத்திற்கு உண்டாகிவிடவில்லை. ஆனால் கவர்ன்மெண்டு கணக்குகளையும் அநுபோக கணக்குகளையும் உற்று நோக்கும்பொழுது நம் தேசிய விவசாய நிலை பரிதபிக்கத் தக்கதாயிருக்கின்றதென்பது திண்ணம். உதாரணமாக "அயினி அக்பரி" என்னும் அக்பர் சக்கிரவர்த்தி காலத்திய நூலிலிருந்து கனம் மிர்ஜா அப்தால் ஹஸேன் K. B. அவர்கள் அடியில் வருமாறு விளக்கி யிருக்கின்றனர்.

### ஏக்கர் 1-க்கு சராசரி விளைவு.

| | அயினி அக்பரில் கண்டபடி ராத்தல் | இப்பொழுது நம்தேசத்தில் ராத்தல் | இப்பொழுது இதர தேசங்களில் ராத்தல் |
|---|---|---|---|
| நெல் | 1358 | 800 | 2500 |
| கோதுமை | 1155 | 660 | 1500 |
| பருத்தி | 233 | 52 | 400 |

இனி, அடியிற் காட்டப்பட்டுள்ள விளைவுப்பட்டியைப் பார்த்தால் நம் தேசங்கள் இதர தேசங்களைவிட விளைவில் எவ்வளவு தூரம் தாழ்ந்தமை பெற்றிருக்கின்றதென்பது தெளிவாகும்.

### கோதுமை விளைவு.

| தேசம் | ஏக்கர் 1-க்கு புஷல் |
|---|---|
| டென்மார்க் | 45 |
| பெல்ஜியம் | 36 |
| ஹாலந்து | 36 |
| பிரிட்டனும் அயர்லாந்தும் | 32 |
| ஸ்விட்சர்லாந்து | 32 |
| ஜெர்மனி | 31 |
| ஸ்வீடன் | 31 |
| நியூஸிலாந்து | 30 |
| எகிப்து | 26 |
| நார்வே | 25 |
| பிரான்ஸ் | 22 |
| லக்ஸம்பர்க் | 21 |
| ஆஸ்திரியா | 20 |
| ஜப்பான் | 19 |
| கானடா | 19 |
| ஹங்கேரி | 18 |
| சிலி | 18 |
| பல்கேரியா | 15 |
| யுனைடெட்ஸ்டேட்ஸ் | 15 |
| இத்தாலி | 14 |
| ஸெர்வியா | 13 |
| ஸ்பெயின் | 13 |
| இந்தியா | 11 |

இவை எல்லாவற்றைப் பார்க்கினும் விளைவு முறையில் செழிமையின் றிக்கீழ் நிலையிலிருப்பது கீழ் நாடான நம்பாரதமாதாவாகிய இவ்விந்தியாவே யென்பது வெளியாகும். இனி இதன் செழிமைமுறையைக்குறித்து மறுமுறை வரைவோம்.

---



## பொருளாதாரக்குறிப்பு

### இந்தியப் பொருளாதாரம் அழிந்துவருவதை அறியாத இந்தியர்கள்.

இந்தியாவில் 100க்கு 3 இந்தியர்களே படித்தவர்களென்று சொல்லப்படுகின்றனர். அவர்களுக்குள் இந்தியப்பொருளாதார நிலையறிந்தவர்களை 100க்கு இவ்வளவுபேர் யென்று கணக்கிட வேண்டுமானால் அது ஒரு எண்ணிக்கையில் அடங்கக்கூடியதல்ல. ஆனால் பதினாயிரத்திற்கு 1 என்று ஒரு சமயம் கணக்கிடலாமெனத்தோன்றுகின்றது. சுருக்கமாய் சொல்லுமிடத்து இந்தியப் பொருளாதாரத்தை ஆராய்ச்சி செய்து அதன் குறைகளை பொதுஜனங்களுக்கு எடுத்துப் புகட்டக்கூடிய சக்தியுடையவர்கள் மிகக் குறிப்பிட்ட சிலரென்றே சொல்லலாம். இந்தியாவில் கல்லூரிகளிலும் சர்வகலாசங்கங்களிலும் (Universities) தற்காலத்திய போதனுமுறையானது இந்தியர்களின் முன்னேற்றத்துக் குரியனவாயில்லை யென்பதும் வெளிப்படையானபிரஸ்தாபம். உண்மையிலும்அதுவே இந்தியப் பொருளாதார விஷயமாம். அந்நியதேச முதலாளிகளுக்குச் சாதகமாக இதுவரை நமது கவர்ன்மெண்டு நடந்துவந்திருப்பதோடு, இந்தியக் கல்லூரிகளிலும், சர்வகலாசங்கங்களிலும், படிக்குமாணவர்கள் அதனை அறிய இடமில்லாமற் செய்துவிட்டனர். இந்திய மாணவர்கள் குமாஸ்தா தொழிலுக்கும், வக்கில் தொழிலுக்கும் கற்பிக்கப்படுகின்றனரேயன்றி வேறல்ல. இந்தியப் பொருளாதாரமாகிறதமானது இந்தியர்களை யறியாமல் பிறதேசமுதலாளிகளால் உறிஞ்சப்பட்டு வருகிறது. அதனால் இந்தியாவினுடையவரவுசெலவு திட்டங்களின் போக்குகளை இவ்விப் பொதுஜனங்கள் அறிய இடமில்லை. அவ்வாறே ராணுவத்தின் செலவு விவரங்களும் இதுவரை இந்தியர்கள் அறிய இடமில்லாமல் நடபடிக்கைகள் நடத்தப்பட்டிருக்கின்றன. இனியும் அப்படியே இதர தேசங்களுக்கும் இத்தேசத்திற்கு முள்ள ராஜதந்திர ரகசியங்களும், அதைநடாத்தும் பான்மைகளையும் இந்தியர்கள் வெளிப்படையாக அறிவதற்கில்லை. பிறதேசங்களுக்கும் இத்தேசத்திற்கும் நடக்கின்ற வியாபார ரகசியங்கள் கூட அந்தரங்கமாகவே யிருக்கின்றன. நாணய நிலைமையைப் பற்றியோ சொல்லவேண்டியதில்லை. அந்நிய தேசச் சாக்குகள் இத்தேசத்திற்கு வரவிடாமல் தடுப்பதற்குரிய வரி மூலமேற்படுத்தப்படும் வியாபார ரகசியங்களும் புலப்படவில்லை. மேற்கல்வி பயிலும் பிறதேச வித்தியார்த்திகளும், இத்தேச வித்தியார்த்திகளும் கூடிக்கலந்து சகலவிதமான கலைகளைப் பற்றிய ஞானத்தை விருத்தி செய்துகொள்ள முடியாமல் அகங்காரச் செயல்கள் தோன்றிவருகின்றன. தொழில் மர்மங்கள், மர்மங்களாகவே (மறைக்கப்பட்டவைகளாகவே) யிருக்கின்றன. இதர தேசத்தாருக்கும், இந்தியாதேசத்தாருக்கும் பிரஜா சமூகமென்ற முறையில் ஒருவரையொருவர்சகோதரம்போலும் கொண்டாடிப்பழகுவதற்குஇடங்கொடுக்கப்படவில்லை.

இந்த முறையில் இந்தியக்கல்வி போதிக்கப்பட்டுவருகின்றது. ஷை துறைகளில் ஏதேனும் சிலபாகத்தை அயல்நாடுகள் சென்று பார்த்தவர்களின் விஷயத்திலோ, கவர்ன்மெண்டார் அபிமானம் செலுத்துவதில்லை. தாங்கள் கற்ற அபூர்வமான வித்தையைஉலகிற்கும் போதிக்கும் போஸ், ராய் போன்றவர்களுக்கு போதுமான பெருத்த உதவிகள் செய்ய கவர்ன்மெண்டார் முற்படவில்லை இதர தேச ஜனங்களையும் இததேசத்திய ஜனங்களையும் எவ்விஷயத்திலும் கூடிக்கலக்க விடாமல் ஜாதிப்பெருமையும், ஆளுவோர் என்ற அகங்காரமும் குறுக்கிட்டு நிற்கின்றன. கவர்ன்மெண்டார் இங்கிலைமையில் சுமார் 120 வருடங்களாகவைத்துவிட்டு அவர்களுக்கு ராஜ்யமாளப் போதுமான சக்தியில்லையென்று உலகத்தார் ஒப்புக்கொள்ளக்கூடாத சமாதானமொன்றுசொல்லப்படுகிறது. இச்சமாதானமானது

இதன் தொடர்ச்சி 6ம் பக்கம் பார்க்க

Printed and Published by S. T Ramanathan Chettiar at the "Vysiamitran" Branch, Press, Karaikudi.

